# திருப்புகழமிர்தம்





ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சௌமிய | வைகாசி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

உ

முருகா

## கும்பாபிஷேகம்

திருச்சி, குமாரவயலூர் ஸ்ரீ முருகப்பெருமான் திருக்கோயிலில் நாளது சௌமிய ஆண்டு ஆனித் திங்கள் 5-ஆம் நாள் (19-6-69) வியாழக்கிழமை காலை 9 மணிக்கு மேல் 11 மணிக்குள் கடக நல்லோரையில் மகாகும்பாபிஷேகம் இனிது நிகழும். விரிவான நிகழ்ச்சி நிரல் பின்னர் வெளியாகும். அன்பர்கள் கண்டு சேவித்து இகபர நலன்களை யடைவார்களாக.

## சந்தா நேயர்களுக்கு

16-4-69க்கு மேல் சந்தாத்தொகையைச் செலுத்தியவர்கட்கெல்லாம் இந்த வைகாசி இதழுடன் சித்திரை மாத இதழும் சேர்த்தனுப்பப்படுகின்றது. ஆசிரியரிடமும், கோவையிலும் சந்தா செலுத்தியவர்கள் விலாசங்கள் காரியாலயத்துக்குக் காலங்கடந்து கிடைத்தமையால் அவர்களுக்கும் வைகாசி இதழுடன் சித்திரை இதழ் சேர்ந்து வருகின்றது.

திருப்புகழமிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16-ந் தேதி (அன்று விடுமுறையானால் அடுத்துவரும் விடுமுறையல்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16-ந் தேதியளவில் தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25-ந் தேதி வரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்படமாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதா மாதம் ஒழுங்காகக் கிடைக்கப் பெறாத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ளவேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பதுவரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

## திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | | |
|---|---|---|
| இந்தியா<br>இலங்கை | ... | ரூ 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ 5-50 |

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



''குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்''

மலர் 34 | சௌமிய ஸூ—வைகாசி மீ
மே 1969 | இதழ் 2

## திருப்புகழ்

### திருவண்ணுமலை

பேதகவி ரோதத் தோதகவி நோதப்
பேதையர்கு லாவைக் கண்டுமாலின்
பேதைமையு ருமற் றேதமக லாமற்
பேதவுடல் பேணித் தென்படாதே

சாதகவி காரச் சாதலவை போகத்
தாழ்விலுயி ராகச் சிந்தையாலுன்
தாரைவடி வேலைச் சேவல்தனை யேனற்
சாரல்மற மானைச் சிந்தியேனோ

போதகம யூரப் போதகக டாமற்
போதருணை வீதிக் கந்தவேளே
போதக கலாபக் கோதைமுது வானிற்
போனசிறை மீளச் சென்றவேலா

பாதகப தாதிச் சூரன்முதல் வீழப்
பாருலகு வாழக் கண்டகோவே
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே.

## பதவுரை

போதக மயூர=யானைமீதும் மயிலின்மீதும், போது அக அகடு ஆ மன் போது=மலராசனம் இட்ட நடு இடத்தில் எழுந்தருளி வருகின்ற, அருணை வீதி=திருவண்ணுமலை வீதியில் உள்ள, கந்தவேளே= கந்தக் கடவுளே! போதகம்=ஐராவத யானையால் வளர்க்கப் பெற்ற, கலாப கோதை=மயில் போன்ற தேவசேனை வாழ்ந்த, முது வானில் போன=பழமையான விண்ணுலகத்தார்கள் சென்றிருந்த, சிறை மீள=சிறையிலிருந்து அவர்கள் மீளும் பொருட்டு, சென்ற வேலா=போருக்குச் சென்ற வேலாயுதரே! பாதக பதாதி= பாவச் செயல்களைச் செய்த காலாட் படைகளையுடைய, சூரன் முதல் வீழ=சூரபன்மன் முதலியோர் வீழ்ந்து மடியவும், பார் உலகு வாழ=மண்ணுலகும் விண்ணுலகும் வாழுமாறும், கண்டகோவே— கருணை புரிந்த தலைவரே! பாதமலர் மீதில்=தேவரீருடைய திருவடியில், போதமலர் தூவி=ஞான மலர்களை அருச்சித்து, பாடும் அவர் தோழ=உமது திருப்புகழைப் பாடுகின்ற அடியவர்களின் தோழராகிய, தம்பிரானே=தனிப்பெருந் தலைவரே! பேதகம்=மனம் வேறுபாடு, விரோதம்=பகைமை, தோதகம்=வஞ்சகம் என்ற இவைகளை, விநோதம்=பொழுது போக்காகக் கொண்ட, பேதையர் குலாவைக் கண்டு=பேதையராம் மாதர்கள் மகிழ்ச்சியுடன் உறவாடுதலைக் கண்டு, மாலின்=மயக்கத்தால், பேதைமை உரு=அறியாமையை அடைந்து, மற்று ஏதம் அகலாமல்=அதனுல் குற்றங் குறைகள் என்னை விட்டு நீங்காது, பேத உடல் பேணி=மாறுபாட்டையடையும் இந்த உடம்பை விரும்பிப் பாதுகாத்து, தென்படாதே=வெளியேஉலவாமல்,சாதகம்=பிறப்பும்,விகாரம்=பாலன் குமாரன் கிழவன் என்னும் வேறுபாடும், சாதல்=இறப்பும், இவை போக=ஆகிய இவை தொலைய, தாழ்வு இல் உயிர் ஆக=குறைவு இல்லாத உயிராக விளங்குமாறு, சிந்தையால்=உள்ளத்தால், உன் தாரை வடிவேலை=உமது கூர்மையும் அழகும் உடைய வேலையும், சேவல்தனை=கோழியையும், ஏனல் சாரல் மறமானை=தினைப் புனத்துடன் கூடிய மலைச்சாரலில் வாழ்ந்த வேடர் மகளாம் மான்போன்ற வள்ளி நாயகியையும், சிந்தியேனோ=அடியேன் தியானிக்கமாட்டேனோ?

## பொழிப்புரை

யானை மீதும், மயில் மீதும் மலராசனம் இட்ட நடு இடத்தில் எழுந்தருளிவருகின்ற, திருவண்ணுமலை வீதியில் உள்ள கந்தக் கடவுளே! ஐராவத யானையால் வளர்க்கப்பெற்ற, மயில் போன்ற தெய்வயானையம்மை வாழ்ந்த, பழமையான விண்ணுலக வாசிகள் புகுந்த சிறைச்சாலையிலிருந்து அவர்கள் மீட்சியடையுமாறு போருக்கு எழுந்த வேலாயுத மூர்த்தியே!

பெரும்பாவச் செயல்களைச் செய்த காலாட்படைகளுடன் கூடிய சூரபன்மன் முதலிய அசுரர்கள் வீழ்ந்து மடியவும், பூவுலகத்தோரும், தேவலோகத்தோரும் வாழுமாறும் கருணை புரிந்த தலைவரே! உமது திருவடிமலரில் ஞானமலர்களை அருச்சித்து, உமது திருப்புகழைப் பாடுகின்ற அடியார்களுக்குத் தோழராக விளங்கும் தனிப்பெருந் தலைவரே! மனவேறுபாடு, பகைமை, வஞ்சகம் இவைகளையே பொழுது போக்காகக் கொண்ட அறிவில்லாத பெண்கள் மகிழ்ச்சியுடன் உறவாடு தலைக் கண்டு காம மயக்கத்தால் அறியாமையை யடைந்து, அதனால் குற்றங்குறைகள் என்னைவிட்டு நீங்காது, மாறுதலை யடையும் இந்த உடம்பை விரும்பிப் பாதுகாத்து, வெளியே உலவாமல், பிறப்பும், மாறுபாடும், இறப்பும் ஆகிய இவைகள் தொலைய, குறைவு இல்லாத உயிராக விளங்கும்படி, அடியேன் உள்ளத்தால், கூர்மையும் அழகும் உடைய வேலையும், சேவலையும், தினைப்புனத்துடன் கூடிய மலைச்சாரலில் வாழ்ந்த மான் போன்ற வள்ளி பிராட்டியையும் தியானஞ்செய்ய மாட்டேனோ?

## விரிவுரை

**பேதகம்:—**

பேதகம்—வேறுபாடு.

நேற்று ஒரு கொள்கை இன்றொரு கொள்கையாகவும், பொருள் தந்தால் விருப்பும், இல்லையேல் வெறுப்பும் இப்படிப் பட்ட மனவேற்றுமை யடைகின்ற மாதர்கள்.

**விரோதம்:—**

பணம் கேட்கும்போதெல்லாம் தரவில்லையானால் பகைமை கொள்வார்கள்.

"ஒருத்தருடனுறவாகி ஒருத்தரொடு பகையாகி
ஒருத்தர்தமை மிகநாடி யவரோடே"

—(வரிக்கலையில்) திருப்புகழ்.

**தோதக விநோதம்:—**

தோதகம்—வஞ்சகம். தமது விருப்பத்துக்குப் பொருள் தராதவர்களை வஞ்சகம் செய்து விரட்டுவர்.

மன வேறுபாடு, பகைமை, வஞ்சனை முதலிய தீக்குணங் களையே தமக்குப் பொழுது போக்காக உடைய மாதர்கள்.

**பேதையர்:—**

அறிவில்லாத மாதர்கள். இது பொது மாதர்களைக் குறிக்கும்.

**குலாவைக்கண்டு மாலின் பேதைமையுறு:—**

அம்மாதர்கள் மகிழ்ந்து உறவாடுதலைக் கண்டு மோக மயக்கமுற்று அறியாமையை யடைந்து கெடுகின்றேன்.

**மற்றேதமகலாமல்:—**

ஏதம்—குற்றம். அதனல் குற்றம் குறைகள் நீங்காமல் தடுமாறுதல்.

**பேதவுடல் பேணி:—**

பேதம்—மாறுபாடு. இந்த உடம்பு தினந்தினம் மாறு பட்டுக் கொண்டிருக்கும். இந்த அற்ப உடம்பை நிலைபேருகக் கருதி அல்லும் பகலும் இந்த உடம்பையே விரும்பி இதற் காகவே பாடுபடுவர்.

**சாதகவிகாரச் சாதலவைபோக:—**

சாதகம்—பிறப்பு, விகாரம்—வேறுபாடு. பாலனுகவும், குமாரனுகவும், கிழவனுகவும் வேறுபாட்டையடைவது, முடி வில் இறந்துபடுதல் ஆகிய இவைகள் தொலையுமாறு.

**தாழ்விலுயிராக:—**

உயிர் குறைவுபடாததாக விளங்கவேண்டும். அதற்கு என்ன வழி என்று அருணகிரிநாதர் பின்வரும் அடியில் இனிது உபதேசிக்கின்ருர்.

**சிந்தையாலுன் தாரை வடிவேலைச் சேவல்தனை யேனற்**
**சாரல் மறமானைச் சிந்தியேனே ?:—**

தாரை—கூர்மை. வடி—அழகு.

கூர்மையும் அழகும் உடைய வேலை நினைக்கவேண்டும். நாத தத்துவமான சேவலை நினைக்கவேண்டும். இச்சாசத்தி யாகிய வள்ளிநாயகியைத் தியானிக்கவேண்டும்.

வேலையும் சேவலையும் வள்ளியம்மையையும் உள்ளத்தால் இடையருது சிந்தித்தால் இறப்பு பிறப்பு முதலிய துன்பங்கள் விலகும். பிறவாத பெற்றியைப் பெற்று உயிர் பேரின்ப மடையும்.

**போதக மயூரம்:—**

முருகப் பெருமான் திருவண்ணுமலையில் யானை வாகனத் தின்மீதும், மயில் வாகனத்தின் மீதும் எழுந்தருளி வரு கின்ருர்.

போதகம்—யானை. மயூரம்—மயில்.

**போதக கடாமன் போது:—**

போது ஆக அகடு ஆமன் போது எனப் பதப்பிரிவு செய்து கொள்க.

போது—மலர். அகம்—உள். அகடு—நடு இடம்.

மலராசனம் இட்ட நடு இடத்தில் எழுந்தருளி வருகின்ற முருகன்.

**போதக கலாப கோதை முதுவான்:—**

போதகம்—ஐராவத யானை.

ஐராவத யானையால் வளர்க்கப்பெற்ற மயில்போன்ற தேவசேனை வாழ்ந்த பழமையான வானுலகம்.

**சிறைமீளச் சென்ற வேலா:—**

தேவர்களின் சிறையை மீட்குமாறு போருக்குச் சென்ற வேலவர்.

தேவர் சிறைமீட்ட முருகன், ஆன்மாவின் பந்தபாசமாகிய சிறையையும் மீட்டு அருளுவார் என்பது குறிப்பு.

**பாதகபதாதி:—**

பதாதி—காலாட்படை. பெரிய பாவங்களையே செய்பவர்களாகிய காலாட்படைகள்.

**சூரன் முதல் வீழ:—**

சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் முதலிய அசுரர்கள் வீழ்ந்து மடியுமாறு முருகவேள் போர்புரிந்தருளினார். இது மும்மலங்களை அழித்தருளினார் என்பதைக் குறிக்கும்.

**பாதமலர் மீதில் போதமலர் தூவிப் பாடுமவர்:—**

இதன் நுட்பங்களை இவ்வாண்டு சித்திரை மாத இதழ் 9-ம் பக்கத்தில் எழுதிய குறிப்பில் காண்க.

## கருத்துரை

அருணைமேவும் அண்ணலே! பிறவித்துன்பந் தொலைய, வேலையும் சேவலையும் வள்ளியம்மையையும் தியானிக்க அருள் செய்.

# திருப்புகழ்

அமுத முறுசொ லாகிய தோகையர்
பொருளு ளாரையெ ணுணையு ணுணையெ
னருகு வீடிது தானதில் வாருமெ னுரைகூறும்
அசடு மாதர்கு வாதுசொல் கேடிகள்
தெருவின் மீதுகு லாவியு லாவிகள்
அவர்கள் மாயைப டாமல் கெடாமல்நி னருள்தாராய்
குமரி காளிவ ராகிம கேஸ்வரி
கவுரி மோடிசு ராரிநி ராபரி
கொடிய சூலிசு டாரணி யாமளி மகமாயி
குறளு ரூபமு ராரி சகோதரி
யுலக தாரி உதாரி பராபரி
குருப ராரிவி காரி நமோகரி அபிராமி

சமர நீலிபு ராரித ஞயகி
மலேகு மாரிக பாலிந ஞரணி
சலில மாரிசி வாயம ஞேகரி பரையோகி
சவுரி வீரிமு நீர்விட போஜனி
திகிரி மேவுகை யாளிசெ யாளொரு
சகல வேதமு மாயின தாயுமை யருள்பாலா
திமித மாடுசு ராரிநி சாசரர்
முடிக டோறுக டாவியி டேயொரு
சிலப சாசுகு ஞுலிநி ஞுமுண விடும்வேலா
திருவு லாவுசொ ணேசர ஞுமலே
முகிலு லாவுவி மானந வோநிலே
சிகர மீதுகு லாவியு லாவிய பெருமாளே.

## பதவுரை

குமரி=இளமையுடையவளும், காளீ=தேவியும், வராகி=வராகியாக விளங்குபவளும். மகேஸ்வரி=பெரிய செல்வத்தையுடையவளும், கவுரி=பொன்னிறமுடையவளும், மோடி=பகைவருக்கு அச்சத்தைச் செய்பவளும், சுராரி நிராபரி=தேவர்களுக்குப் பகைவர்களாகிய அசுரர்களே முதன்மையிழக்கச் செய்பவளும், கொடிய சூலி=உக்கிரமான சூலாயுதத்தை யேந்தியவளும், சுடாரணி=மயானத்தில் இருப்பவளும், யாமளி=பச்சை நிறம் படைத்தவளும், மகமாயி=மகாமாயியும்,குறள் உரூப முர அரி சகோதரி=வாமன வடிவங் கொண்டவரும் முரன் என்ற அரக்கனேக் கொன்றவரும் ஆகிய திருமாலின் சகோதரியும், உலகதாரி=உலகங்களேத் தாங்கிக் காப்பவளும், உதாரி=தயாள குணம் உடையவளும், பராபரி=முதன்மை பூண்டவளும், குருபராரி=குருபரனும் சிவபெருமானுக்குக் கண் போன்றவளும், விகாரி=வேறுபாடுகளேப் பூணவல்லவளும், நமோகரி=வணங்கப்படுபவளும், அபிராமி=பேரழகுள்ளவளும், சமர நீலி=போரில் வல்ல துர்க்கையும், புராரி தன் நாயகி=திரிபுரத்தை யெரித்தவருடைய பத்தினியும், மலே குமாரி=இமயமலேயின் புதல்வியும், கபாலி=கபாலத்தை யேந்தியவளும், நல் நாரணி=நல்ல நாரணியும், சலில மாரி=நீர் பொழியும் மழைத் தேவியும், சிவாய மனேகரி=சிவ சம்பந்தப்பட்டு விரும்பத் தக்கவளும், பரை யோகி=பராசக்தியும் யோகியும் ஆனவளும், சவுரி=சௌரியம் உடையவளும், வீரி=வீரத்தைப் படைத்தவளும், முநீர் விட போஜனி=கடலில் விளேந்த நஞ்சையுண்டவளும், திகிரி மேவு கையாளி=சக்கரத்தை யேந்திய திருக்கரத்தையுடையவளும், செயாள்=செம்மையுடையவளும், ஒரு சகல வேதமும் ஆயின தாய்=ஒப்பற்ற எல்லா வேதங்களுமாய் நிறைந்த அன்னேயும் ஆகிய, உமை அருள்

பாலா = உமாதேவி அருளிய குழந்தையே! திமிதம் ஆடு = பேரொலி செய்து போராடியவர்களும், சுர அரி = தேவர்களை அழிப்பவர்களும், நிசாசரர் = இரவில் உலாவுபவர்களும் ஆகிய அசுரர்களின், முடிகள் தோறும் = தலைகள்தோறும், கடாவி இடு = ஆயுதங்களைச் செலுத்திப் படுமாறு செய்து, ஏய் = அங்கு பொருந்தியிருந்த, ஒரு சில பசாசு = ஒரு சில பேய்கள், குணலி = குணலையென்ற ஒருவகைக் கூத்தாடி, நிணம் உண = மாமிசங்களை உண்ணும்படி, விடும் வேலா = வேலாயுதத்தை விட்டவரே! திரு உலாவு = இலட்சுமிகரம் பொருந்திய, சொணேசர் அணுமலை = சோணேசரது திருவண்ணுமலையில், முகில் உலாவும் = மேகங்கள் உலாவுகின்ற, விமானம் = கோயிலில், நவோ நிலை சிகரமீது குலாவி உலாவிய = ஒன்பது நிலையுடைய கோபுரத்தின் மீது மகிழ்ச்சியுடன் உலாவிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! அமுதம் ஊறு சொல் ஆகிய = அமுதம் ஊறுவது போன்ற இனிய சொற்களையுடைய, தோகையர் மயில் போன்ற மாதர்கள், பொருள் உளாரை = செல்வம் படைத்தவர்களை, என் ஆணை = என் மேல் ஆணை என்றும், என் அருகு வீடு இதுதான் = என் வீடு சமீபத்தில் உள்ளதே இதுதான், அதில் வாரும் = அங்கே வாரும், என் உரை கூறும் அசடு மாதர் = என்று உரையாடுகின்ற மூடப் பெண்கள், குவாது சொல் கேடிகள் = குதர்க்கம் பேசுகின்ற கேடுறுவோர், தெருவின்மீது குலாவி உலாவிகள் = நடுத் தெருவில் குலவி உலாவுபவர்கள், அவர்கள் மாயை படாமல் = இத்தகைய பொது மாதர்களின் மாயை என்மீது தாக்காமலும், கெடாமல் = அடியேன் கெட்டுப் போகாமலும், நின் அருள் தாராய் = தேவரீருடைய திருவருளைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

குமரி, காளி, வராகி, மகேசுவரி, கௌரி, மோடி, தேவர்களை யலைக்கும் அசுரர்களை யழிப்பவள், உக்ரமான சூலத்தை யேந்தியவள், மயானத்தில் வாழ்பவள், பச்சைநிறமுடையவள் மாமாயி, வாமன மூர்த்தியான திருமாலின் சகோதரி, தயாளகுணமுடையவள், பராபரி, குருபரனும் சிவமூர்த்திக்குக் கண் போன்றவள், வேறுபாடுகளைக் கொள்பவள், வருணிக்கப்படுபவள், பேரழகுடையவள், போர்புரியவல்ல துர்க்காதேவி, திரிபுரமெரித்த சிவபெருமானுடைய பத்தினி, இமயமலையின் புதல்வி, கபாலத்தை யேந்தியவள், நலஞ்செய்யும் நாராயணி, மழைபொழியும் மாரி, சிவமயமான விரும்பத்தக்கவள், பரை, யோகி, சௌரியமுடையவள், வீரி, கடல் நஞ்சுண்டவள், சக்கரத்தை யேந்திய திருக்கரத்தினள், செம்மையுடையவள், ஒப்பற்ற எல்லா வேதங்களுமான அன்னை, இவ்வாறு விளங்கும் உமாதேவியின் திருக்குமாரரே! பேரொலி செய்து போராடியவர்களும், தேவர்களுக்குப் பகைவர்களும், இரவில் சஞ்சரிப்

பவர்களுமாகிய அசுரர்களின் தலைகள் தோறும் ஆயுதம் படுமாறு செலுத்தி, அங்குள்ள சில பேய்கள் குணலை என்ற கூத்தாடி மாமிசத்தை உண்ணும்படி வேலாயுதத்தை விட்ட வரே! இலட்சுமிகரம் பொருந்திய சோணேசருடைய திரு வண்ணாமலையில் மேகம் உலாவிய கோயிலில் ஒன்பது நிலை களையுடைய கோபுரத்தின் உச்சியில் மகிழ்ந்து உலாவிய பெரு மிதம் உடையவரே! அமுதம் ஊறுகின்ற இனிய சொற்களை யுடைய மயில் போன்றவர்களும், பொருள்படைத்த செல்வர் களை "என்மேல் ஆணை" "உம் மேல் ஆணை" நீர் என்னை விட்டுப் போகக்கூடாது, இதுதான் என் வீடு, அருகில் உள் ளது. அங்கே வாரும் என்று உரையாடுகின்ற மூடப் பெண் களும், குதர்க்கம் பேசுபவர்களும், கேடு செய்பவர்களும், நடு வீதியில் மகிழ்ந்து உலாவுபவர்களுமாகிய விலை மாதர்களின் மாயை என்மீது படாமலும், அதனால் அடியேன் கெடாமலும் தேவரீர் திருவருள் தருவீராக.

## விரிவுரை

**அமுதமூறு சொலாகிய தோகையர்:—**

காமுகர்க்குத் தாம் விரும்பிய மாதர்களின் வாயிலிருந்து வரும் சொற்கள் அமுதம்போல் இனிக்கும்.

தோகை—மயில். தோகையையுடைய மயில். இது சினையாகுபெயர். உவம ஆகு பெயராக மாதரைக் குறிக் கின்றது.

**பொருளுளாரை யெனாணை யுனாணை:—**

பொருள்படைத்தவரைப் பார்த்தவுடன் விலைமகளிர் "தாங் கள் என்னைவிட்டுப் போகக் கூடாது; என்மேல் ஆணை; தங்கள்மீதும் ஆணை" என்று ஆணையிட்டுத் தடுத்து நிறுத்து வார்கள்.

இப்படி ஆணையிடுவது அருளாளர்க்கே உரியது.

**"வானமரசாள்வர் ஆணைநமதே"** —திருஞானசம்பந்தர்.

**எல்லாஞ் செயல்கூடும் என்னாணை அம்பலத்தே**
**எல்லாம் வல்லான்றனையே ஏத்து.** —இராமலிங்கர்.

இத்தகைய அருட்செல்வர்கள் தம்மீது ஆணையிட்டுக் கூறுவது பொருந்தும்.

ஒன்றுக்கும் உதவாத பொதுமாதர்களும் என்னாணை யென்று கூறுவது எத்துணை அவலம்?

**எனருகு வீடிது தானதில் வாருமெ னுரையாடி:—**

"இதோ அருகிலே இருப்பதுதான் என்வீடு; வீதியில் ஏன் நின்று பேசவேணும்? உங்கள் பாதமலர் வைத்தால் நான்

பாக்யசாலி ஆவேன்; என்வீடு புனிதமடையும்; இந்த உடம்பே உங்கட்கு உரியது. என் உடல் பொருள், உயிர் எல்லாம் தங்கட்குச் சொந்தம். வாரும் உள்ளே போவோம்'' என்று பால்போல், தேன்போல் தித்திக்கப் பேசி இளைஞரை—தனவந்தரை அழைத்துப்போய் பொருள்பறிப்பர்.

**குவாது சொல் கேடிகள்:—**

குவாது—குதர்க்கம். ஆடவர் ஏதாவது கூறினுல் "அது இப்படி; இது அப்படி'' என்று குதர்க்கவார்த்தைகள் கூறி கேடுபுரிவோர்.

**தெருவின்மீது குலாவி யுலாவிகள்:—**

பெண்களுக்கே உரிய நாணம் மடம் என்ற பண்புகள் இன்றி நடுத்தெருவில், மேலாடை நழுவ உலாவிக் குலாவுவர்.

''முலையிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள்''

—(குமரகுருபர முருக குகனே) திருப்புகழ்.

**அவர்கள் மாயை படாமல் கெடாமல்:—**

"இத்தகு பொருட் பெண்டிரது மாயை என்மீது படாமலும், அதனுல் கெடாமலும் முருகா! உன் திருவருள் தந்தருள்''

''குலாவி யுலாவி'' ''படாமல் கெடாமல்''

என்ற வழி யெதுகைகளை மிகவும் இனிமையாக அடிகளார் அமைத்துப் பாடியுள்ளார்.

இதுபோல் அலங்காரத்திலும் "அம்பரம் பம்பரம் பட்டுழல'' என்கின்ருர். அநுபூதியிலும் "வலாரி தலாரி" என்கின்ருர்.

**குமரி:—**

இத்திருப்புகழ் தேவியின் துதிவார்த்தைகள் நிறைந்தது.

குமரி—என்றும் இளமையாக இருப்பவள்.

**காளி:—**

கருநிறம் உடையவள்.

**வராகி:—**

வராகி என்பது அம்பிகையின் பல வடிவங்களில் ஒன்று. பன்றியின்முகம் உடைய திருவுருவம். இம்மூர்த்தி காசியில் விசாலாட்சி காட் என்ற இடத்தில் கோயில் கொண்டிருக்கக் காணலாம். அதி உக்ரமான மூர்த்தி. சூரிய உதயத்துக்கு முன் வழிபாடு செய்வார்கள்.

**மகேஸ்வரி:—**

பெரிய ஐஸ்வர்யமுடையவள்.

**கவுரி:—**

பொன்னிறம் படைத்தவள்.

**மோடி:—**

பகைவர்க்குத் துன்பஞ் செய்பவள்.

**சுராரி நிராபரி:—**

சுரர்கள் என்ற தேவர்களை அலைக்கின்ற அசுரர்களின் முதன்மையை யழிக்கின்றவள்.

**கொடிய சூலி:—**

உக்கிரமான சூலப்படையை ஏந்தியவள்.

**சுடாரணி:—**

சுடு ஆரண்யம் மயானத்தில் வாழ்பவள்.

**யாமளி:—**

ஒருவகையான பச்சை நிறம் உடையவள்.

**மகமாயி:—**

மகத்தான மாயம் புரிபவள்.

**குறளுருப முராரி சகோதரி:—**

குறள்—குள்ளம். மாபலியிடம் வாமன வடிவுடன் சென்ற வரும், முரன் என்ற அரக்கனை அழித்தவருமாகிய நாராயண ருடைய சகோதரி.

**உலகதாரி:—**

எல்லா வுலகங்களையுந் தாங்குகின்றவள்.

**உதாரி:—**

கொடைக்குணம் உடையவள்.

**பராபரி:—**

மிகவும் மேலானவள்.

**குருபராரி:—**

அரி—கண்.

குருபரனாகிய சிவமூர்த்திக்குக் கண் போன்றவள்.

**விகாரி:—**

வேற்றுமைகளையுடையவள்.

**நமோகரி:—**

எல்லாருடைய வணக்கங்கட்கும் உரியவள்.

**அபிராமி:—**

பேரழகுடையவள்.

**சமர நீலி:—**

போருக்குரிய துர்க்காதேவி.

**நனாரணி:—**

நன்மையே செய்யும் நாராயணி.

**சலிலமாரி:—**

குளிர்ந்த நீரைப் பொழிகின்ற மழைத் தெய்வமாக விளங்குபவள்.

**சிவாய மஞ்ஞகரி:—**

சிவாய என்ற மூன்றட்சரங்கட்கு உரியவள். சிவமயமானவள்: உள்ளத்துக்கு உவகை தருபவள்.

**பரை யோகி:—**

உயர்ந்தவளும், யோக சக்தியுமானவள்.

**சவுரி:—**

சௌரியம்—பராக்கிரமத்தை யுடையவள்.

**முநீர்விடபோஜனி:—**

ஆற்றுநீர் ஊற்றுநீர் மழைநீர் என்ற மூன்று நீர்களை யுடைய கடலில் விளைந்த ஆலகால விடத்தை உண்டவள்.

**திகிரிமேவு கையாளி:—**

அம்பிகை திருமாலின் அம்சம் ஆதலால் சக்கரத்தை ஏந்துகின்றாள்.

**செய்யாள்:—**

செம்மை நிறம் உடையவள்.

"பிங்கலை நீலி செய்யாள் வெளியாள் பசும் பெண்கொடியே"

—அபிராமி அந்தாதி (21)

**சகல வேதமு மாயின தாய்:—**

எல்லா வேதங்களும் தானேயாய் நின்ற தாய்.

"மறையாய் மறைப் பொருளாய்......
இடம்பிரியா எம்பிராட்டி."

—திருவிளையாடற்புராணம் (தடாதகை) 42

**திமிதமாடு:—**

பேரொலியுடன் வந்து அசுரர்கள் போர்புரிந்தார்கள்.

**கடாவி யிடேய்:—**

கடாவுதல்—செலுத்துதல். இடு, ஏய் எனப் பதப்பிரிவு செய்க

**குணலி நிணமுண:—**

பேய்கள் குணலை என்ற ஒருவகைக் கூத்தாடி மாமிசத்தை யுண்டு மகிழ்ந்தன.

**நவோநிலை சிகரம்:—**

ஒன்பது நிலைகளையுடைய கோபுரம்.

## கருத்துரை

அருணைக் கோபுரத்தில் உச்சியில் உலாவிய முருகா! மாதர் மயலற அருள் செய்.

உ

முருகா

# கற்பு

## காதை நாயகி

கோதைநாயகி, மருதாசலஞ் செட்டியாருடைய இளைய மனைவி: மருதாசலஞ் செட்டியார் கஜபுரத்தில் சிறப்பாக வியாபாரம் புரிந்து கொண்டிருந்தார். ஊரில் கலகம் வருமாயின் இவர் சென்று சமரசஞ் செய்துவிடுவார். பல குடும்பங்களில் நடைபெறும் வம்பு வழக்கு களில் இவர் நியாயங் கூறி இரு தரத்தாரும் உள்ளம் உவக்குமாறு சமாதானம் செய்து வைப்பார். அதனுல் அவர்கள் நீதிமன்றம் போய் வழக்கறிஞரிடம் பணம் தந்து துன்பப்படும் அவலம் ஏற் பட்டாமல் சாந்தியடைந்தார்கள். இதனுல் பல குடும்பங்கள் பய னடைந்தன.

இவருடைய முதல் மனைவி ஒரு ஆண்மகவைப் பெற்று சிவபதம் அடைந்தாள். அதனுல் கோதைநாயகியை இரண்டாந்தாரமாகக் கல்யாணஞ் செய்ய நேர்ந்தது. மூத்த தாரம் சந்தனம்; இளைய தாரம் நெருப்பு. நேர்மாருனது.

கோதைநாயகிக்கு காதுவரை அகன்ற பெரிய வாய். வள வளப்புக்காரி. ஒரு விஷயம் அகப்பட்டுவிட்டால் போதும். விட மாட்டாள். விடாது பேசிக்கொண்டேயிருப்பாள். மூத்தாள் மகன் முருகனைப் பார்த்தால் நஞ்சுபோல் வெறுப்பாள். கணவன் இல்லாதபோது உடல் நைய அடித்துத் துன்புறுத்துவாள். தாயில் லாத அச்சிறுவன் இந்தத் தாடகையின் கையில் சிக்கி பஞ்சு படாத பாடுபட்டான். கணவன் எதிரில் அவனை மிகுந்த அன்புடன் உப சரிப்பதுபோல் நடிப்பாள்.

கோதைநாயகிக்கு ஒன்றன்பின் ஒன்ருக நான்கு ஆண் குழந்தை கள் பிறந்தன. தன் குழந்தைகளைச் சீரும் சிறப்புமாகச் செல்வமாக வளர்த்தாள். விதம் விதமாகப் பட்சணம் செய்து தருவாள். முருகனுடைய கண்ணிலேகூட அவைகளைக் காட்டமாட்டாள். குழந்தை தனக்கு ஒன்றும் கிடைக்கவில்லையே என்று எண்ணி ஏங்குவான்.

ஒரு நாள் நெய் அதிரசம் செய்தாள். ஒரு எவர்சில்வர் ஏனம் நிறைய அடுக்கினுள். இதனைச் சாளரத்தின் வழியாக முருகன் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் வாயில் நீர் ஊறியது.

பள்ளியிலிருந்து பிள்ளைகள் வந்தவுடனே, கோதைநாயகி, அக மலர்ந்து, முகமலர்ந்து, ''வாங்கடா கண்ணுகளா'' என்று அழைத்து, உள்ளே உட்கார வைத்து, எவர்சில்வர் தட்டுக்களில் நெய்யதிரசம் ஆளுக்கு நாலு வீதம் கொடுத்து உபசரித்தாள். முருகனிடம் ஒரு சிறு துண்டுகூடத் தரவில்லை. அவனும் சிறுவன்தானே.

''சின்னம்மா! எனக்கு அதிரசம்'' என்று கொஞ்சிய, கெஞ்சிய குரலில் கேட்டான் முருகன், ரணபத்ர காளிபோல் சீறினுள் அவள். பளார் என்று அவனுடைய கன்னத்தில் ஒரு அறை கொடுத்தாள். ''தடிப்பயலே! தரித்திரம் பிடித்த தறுதலையே! உன் வயிற்றுக்கு ஆகுமா? அதிரசமா அதிரசம்...ம்...ம்... கொன்னுடுவேன். போ வெளியே; எங்கெங்கோ வருகின்ற வைசூரி, உனக்கு வரவில்லையே! மடச் சாம்பிராணி'' என்று வைது கழுத்தைப் பிடித்துத் தள்ளினுள். இந்த அடி உதையைத் தாங்காத அச்சிறுவன், கண்ணீர் சிந்திய வண்ணம், தோட்டத்தில் உள்ள வேப்ப மரத்தின்கீழ் அமர்ந்து அழு தான். ஆண்டவனைத் தொழுதான்.

''அப்பனே! ஆறுமுகனே! உன் பேர் படைத்த எனக்கு இந்த வேதனையா? உன் சோதனையா? முற்பிறப்பில் செய்த பாவங்களு அனைத்தும் திரண்டு உருண்டு எனக்கு மாற்ருந் தாயாக இவள் வந்தாள் போலும். வயிறும் வாயும் எல்லாருக்குந்தானே இருக் கின்றன. தம்பிகளுக்கு நாலு நாலு தந்தாளே. எனக்கு ஒன்ருவது தரக்கூடாதா? என்ன பாவஞ் செய்தேனே? வினையை நோவாமல் யாரை நோவது?'' என்று நொந்து வெந்து புலம்பினுன்.

மருதாசலம் செட்டியார் வீட்டுக்கு வந்தார். அவரை அன் புடன் வரவேற்று, வெள்ளித் தட்டில் நான்கு அதிரசம், காராபூந்தி காப்பி முதலியன தந்தாள் கோதைநாயகி. இவற்றை அவர் சாப் பிட்டுக்கொண்டே ''கோதை! அதிரசஞ் செய்தாயா?'' என்று கேட்டார்.

''ஆமாம், குழந்தைகள் கேட்டார்கள்'' என்ருள் அவள்.

''முருகன் சாப்பிட்டானு?''

''அவனுக்குத்தான் முதலில் கொடுத்தேன்; அவனுக்கு இல்லா ததா? தாய் இல்லாத பிள்ளை. நிரம்பச் சாப்பிட்டுவிட்டு எங்கேயோ போய் விளையாடுகின்ருன்'' என்று அவள் வாய்கூசாமல் பச்சைப் புளுகு புளுகினுள்.

இவற்றைக் காதால் கேட்டான் முருகன். ''ஆ! ஆ! அப்பா நம்மீது வைத்துள்ள அன்புக்கும், சின்னம்மா சொல்லுகின்ற பொய் யுக்கும் அளவேயில்லை. நாம் நமக்குத் தரவில்லையென்று அப்பாவிடம்

சொன்னால், அப்பா இல்லாதபோது மேலும் மேலும் நம்மை அடித்து நொறுக்கிவிடுவாள்'' என்று எண்ணினான்.

''செட்டியார் ''ராசா! இங்கே வா!'' என்று மகனை அழைத்தார். முருகன் மெல்லப் போனான். ''இந்தா ஒரு அதிரசம் நீ சாப்பிடு'' என்றார்.

முருகன் ''வேண்டாம் அப்பா! சின்னம்மா எனக்கு நிறையத் தந்தார்கள்'' (அடி உதை என்று பொருள்) என்றான்.

செட்டியார் அவசரமாக வெளியே கிளம்பிவிட்டார். முருகன் பழையபடியே தோட்டத்திற்குப் போய் தன் துயரை வேப்பமரத் தடியில் போக்கிக் கொண்டான்.

முருகன் அக்கறையாகப் படித்து எல்லா வகுப்புக்களிலும் முதன்மையான எண்ணிக்கைகளைப் பெற்றான். செட்டியார் முருகனை சென்னையில் கல்லூரியில் சேர்த்தார். மாதாமாதம் அவனுக்குரிய செலவுக்குப் பணம் அனுப்பி வந்தார். அது முதல் மாற்றாந்தாயின் கொடுமை நீங்கியது. மன ஆறுதலாகவும், அயர்ச்சியில்லாத முயற்சியுடனும் படித்து B.A. பட்டம் பெற்றான். அவன் விடுமுறை நாட்களில் வீட்டுக்கு வந்தாலும் பெரும்பொழுது தந்தையாருடன் கடையில் கழித்துவிடுவான்.

முருகன் சென்னையில் M.A. வகுப்பில் படித்துக் கொண்டிருந் தான். ஒருநாள் கடற்கரையில் தனிமையாக அமர்ந்து, தன் பாடங்களைச் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

ஐயோ! என்ற ஒரு அலறு குரல் அவன் காதில் விழுந்தது. சற்று தூரத்தில் அழகின் சிகரமாக ஒரு இளம் பெண் நடந்து வரும் போது காலில் கண்ணாடித் துண்டு பாய விழுந்து துடித்தாள். முருகன் ஓடி அவளை எடுத்து, காலில் உள்ள கண்ணாடித் துண்டை எடுத்து, தன் கைத் துண்டினால் உதிரத்தைத் துடைத்து, தன் பையில் இருந்த போரிங் பவுடரை இட்டு அவளுடைய துன்பத்தை மாற்றினான்.

அப்பெண்மணி அவனுடைய அன்பையும் பரந்து விரிந்த மார்பையும், சந்திர ஒளி வீசும் குளிர்ந்த முகத்தையும், தனக்கு உதவி செய்த கரமலர்களையும் பார்த்தாள்.

''உங்களுக்கு நிரம்ப நன்றி; என்னால் தாங்கள் மிகுந்த சிரமம் எடுத்துக்கொண்டீர்கள். உமக்கு வணக்கம்'' என்றாள். அவள் குரல் தேன்போல் இனித்தது.

''ஒன்றும் நான் செய்து விடவில்லையே! இது மனிதன் செய்யும் கடமைதானே! ஒவ்வொருவர் கோபுரம் புதுக்குகின்றார்கள். கோவிலைக் கட்டுகின்றார்கள்; கல்லூரி அமைக்கின்றார்கள், மருத்துவ

மனை எழுப்புகின்றார்கள். நான் என்ன செய்துவிட்டேன்? இதற்கு நிரம்ப உபசார மொழி கூறுகின்றீரே ?''

"நான் தங்களைவிட இளையவள்; என்னை நீர் என்றும் உமக்கு என்றும் பன்மையாகக் கூறலாமா? நீ, உன் என்றால்தான் மகிழ் வேன். தாங்கள் சாட்சாத் முருகனைப்போல காட்சி தருகின்றீரே? தங்களை நான் தெரிந்து கொள்ளலாமா ?''

''என் பேர் முருகன். அன்புச் செல்வமே! கஜபுரம் என் சொந்த ஊர். இங்கு கல்லூரியில் M.A. பயின்று கொண்டிருக்கின்றேன். தனிமையில் இனிமையுளது என்பார்கள்.

''பசித்திரு,

தனித்திரு,

விழித்திரு''

என்பது வள்ளலார் வாக்கு. இந்த மூன்று பதங்களிலுமுள்ள முன் எழுத்துக்களைச் சேர்த்தால் பதவி என்று ஆகும். பசித்திருந்தால் தனித்திருந்தால் விழித்திருந்தால் பதவி வரும். அதனால் யாரு டனும் சேர்வதில்லை. ஓய்ந்த நேரங்களில் ஜன நடமாட்டம் இல்லாத இங்கு வந்து படிப்பேன். நீ எங்கிருக்கின்றாய் ?''

''என் பேர் வள்ளி. உங்கள் பேருக்கும் என் பேருக்கும் ரொம்பப் பொருத்தம். நீங்கள் தனிமையைத்தான் விரும்புகின்றீர் போலும். நான் உங்களுடன் பேசுவதோ பழகுவதோ உங்களுக்குப் பிடிக்காது என்று கருதுகின்றேன். மன்னிக்க வேணும். உங்கள் தனிமையின் இனிமையை நான் கெடுத்துவிட்டேன். நான் உலாவ வந்தேன். ஏதோ முற்பிறவியில் செய்த நல்வினைப் பயனால் உங்கள் சந்திப்பு கிடைத்தது. எனக்கு ஆண்களிடம் ஒருவிதமான வெறுப்பு உண்டு. ஆண்களில் பலர் பெண்களைத் தங்கள் அடிமைகளாகவும், இன்ப யந்திரங்களாகவும் கருதுகின்றார்கள்.''

வள்ளி களுக்கென்று சிரித்தாள். அந்த சிரிப்பில் உதிர்ந்த மின்சார அலைகள் முருகன் உடம்பில் பாய்ந்து அவனை என்னமோ செய்தது.

''வள்ளி! ஆண் குலமே உனக்குப் பிடிக்காது போலும். நான் உன்னுடன் பேசுவதும் உனக்குப் பிடிக்காது. நான் விடைபெற்றுக் கொள்ளுகின்றேன்.''

''இல்லை. இல்லை. உங்களை எனக்குப் பிடிக்கின்றது. உமது முகத்தில் உத்தம குணங்கள் நிழலாடுகின்றன. நீர் புண்ணிய புருஷர். என் உள்ளம் உம்மைக் கண்டவுடன் உருகுகின்றது.

ஏதோ முற்பிறப்பின் தொடர்போ யாதோ? உம்மைப் பார்த்த அந்தக் கணமே உள்ளம் உருகுகின்றது. அன்பு பெருகுகின்றது.''

''வள்ளி! நீ என்ன படிக்கின்ருய்?''

''நான் B.A. படிக்கின்றேன்.

என் தந்தை சிங்காரஞ் செட்டியார். எவர்சில்வர் மொத்த வியாபாரி. நான் அவருக்கு ஏக புத்திரி. எங்கள் பங்களா நுங்கம் பாக்கத்தில் இருக்கின்றது. என் கார் அங்கே நிற்கின்றது. வாருங்கள். பங்களாவுக்கு வந்து, பசியாறிவிட்டு தாங்கள் ஹாஸ்டலுக்குப் போகலாம். மறுக்கக் கூடாது. என் அன்புக் கட்டளையை ஏற்க வேண்டும்.''

இருவரும் புறப்பட்டார்கள். அவர்கள் மணலில் நடந்து போவது உண்மையிலே முருகனும் வள்ளியும் தினைப்புனத்தில் போவதுபோல் இருந்தது.

வள்ளியே கார் ஓட்ட அமர்ந்தாள். முருகன் அதில் அமரச் சிறிது தயங்கினுன். ''சும்மா! ஏறுங்கள்!'' என்ருள். பின் சீட்டில் ஏறப் போனுன். ''இது என்ன வேற்றுமை. நான் என்ன பேயா? பிசாசா? நான் தங்கள் அடிமை. முன் சீட்டில் அமருங்கள்'' என்ருள் அவ்வாரணங்கு. தயங்கித் தயங்கி முருகன் ஏறினுன். அவள் வேகமாகக் கார் ஓட்டினுள். அவள் கூந்தல் காற்றின் வேகத்தில் அவன்மீது பலமுறை பட்டன. அப்போதெல்லாம் அவன் அடைந்த இன்பத்துக்கு அளவு ஏது?

கார் நேரே தெற்கே போயிற்று.

''வள்ளி! நுங்கம்பாக்கம் என்றனையே? கார் எங்கோ போகின்றதே'' என்ருன் முருகன்.

''சும்மா வாருங்கள். நான் என்ன நரகத்துக்கா உங்களை அழைத்துப் போவேன். திருவான்மியூரில் பரம ஞானியும் உபய அருணகிரிநாதராகத் திகழ்ந்தவருமாகிய பாம்பன் சுவாமிகளின் சமாதிக் கோயில் இருக்கின்றது. அது பரம புனிதமானது. பாம்பன் சுவாமிகள் முருகனைக் கனவிலும் நனவிலும் தரிசித்த மகான். அங்கே போய் தெரிசித்துவிட்டுப் போகலாம். அப் பரம ஞானியின் கருணையால் எண்ணிய எண்ணங்கள் சித்திக்கும்'' என்ருள்.

கார் பாம்பன் சுவாமி கோயிலை அடைந்தது. இருவரும், அங்குள்ள கிணற்றில் கைகால்களைத் தூய்மை செய்துகொண்டு பய பக்தியுடன் வழிபாடு செய்தார்கள். வள்ளியின் கண்களில் ஆருய்க் கண்ணீர் பெருகிற்று. அவளுடைய பக்திப் பரவசத்தைக் கண்ட

முருகன் பெருமிதம் அடைந்தான். இவள் ஒரு தூய ஆன்மா! இவளுடைய தொடர்பு நம்மைப் புனிதப்படுத்தும். நம் வாழ்க்கைக்கு இவள் இன்பந் தருவாள்'' என்று எண்ணினன்.

இருவரும் கார் ஏறி நேரே நுங்கம்பாக்கம் போனுர்கள். பெரிய பங்களா? சுற்றிப் பூ மரங்கள். வேலைக்காரன் கேட்டைத் திறந்தான். உள்ளே முருகனைக் கூடத்தில் உயர்ந்த ஆசனத்தில் இருத்தினுள். உள்ளே ஓடி தன் கரமலரால் நெஸ் காப்பி கொணர்ந்து நீட்டினுள். அவள் கைப்பட்ட காப்பி அவனுக்கு அமுதமாக இருந்தது.

''வள்ளீ! உன் அம்மா எங்கே?''

''எனக்கு அம்மா இல்லை. இளமையிலேயே காலமாகிவிட்டார்கள். அப்பா, மறுமணஞ் செய்துகொண்டால் எனக்கு மாற்ருந் தாயால் கொடுமை நேரும் என்று தன் வாழ்க்கையை எனக்காகத் தியாகஞ் செய்துவிட்டார். அப்பா என்னை மிகச் செல்வமாக வளர்த்தார். என் மனத்துக்கு மாருக அவர் அணுவளவும் செய்ய மாட்டார். சமையலுக்கு இரு பெண்கள் இருக்கின்ருர்கள். அப்பா இன்னும் சிறிது நேரத்தில் வந்துவிடுவார்... தாங்கள் அதுவரை இருக்கலாமா?''

''முருகன்! வள்ளி என்னை மன்னித்துவிடு. பாடங்கள் நிரம்ப இருக்கின்றன. நான் போய்ப் படிக்கவேண்டும். இப்போது தடை சொல்லாமல் விடை கொடு.'' என்ருன்.

''நல்லது. உங்கள் உடம்புதானே போகின்றது. உள்ளம் உணர்ச்சி அத்தனையும் என்னிடந்தானே இருக்கின்றன. ஞாயிற்றுக் கிழமை காலை கார் அனுப்புவேன். வாருங்கள். இங்கேயே ஆகாரம் செய்துகொண்டு, என்னுடன் இருந்து என்னை ஆசீர்வதியுங்கள்'' என்ருள்.

ஒரு பொத்தானை அழுத்தினுள். டிரைவர் வந்து நின்ருன். ''மணி! இவரை அவர் கூறும் இடத்தில் விட்டுவிட்டு வா. என்று கூறிவிட்டு, கண் குளமாகி நின்று கைகூப்பி நின்ருள். அவளுடைய அன்புக் கடலில் முழுகிய முருகன் புறப்பட்டுப் போனுன். அது முதல் அவன் உள்ளத்தில் அவள் குடிபுகுந்தாள். வள்ளி உள்ளத்திலும் அவன் குடிபுகுந்தான்.

வள்ளியின் அன்புக் கட்டளைப்படி ஞாயிறு அன்று அவள் அனுப்பிய ப்ளீமவுத்துக் காரில் அவளுடைய பங்களாவுக்குச் சென்ருன். வள்ளி அவனை அன்புடன் வரவேற்று, அவனைத் தன் தந்தைக்கு அறிமுகம் செய்து வைத்தாள். வள்ளியின் தந்தை சிங்காரஞ் செட்டியார் அன்புடன் அவன் கையைக் குலுக்கி வர

வேற்று உபசரித்தார். நெடுநேரம் அவனுடன் பேசி மகிழ்ந்தார். அவனுடைய பேச்சில் பளிச்சிட்ட அறிவு ஒளியைக் கண்டார். அவன் ஒரு சிறந்த மகாபுருஷன் என்று எளிதில் விளங்கிக் கொண்டார்.

இவ்வாறு அடிக்கடி முருகன் வள்ளியிடம் போய் அன்புடன் பழகினான். அவர்களின் இரு உள்ளங்களும் ஒன்றுபட்டன. இதனைக் குறிப்பாக உணர்ந்த சிங்காரஞ் செட்டியார் இது நல்ல சம்பந்தம் என்று அறிந்து உவகை பூத்தார்.

முருகனுடைய தந்தை வியாபார சம்பந்தமாகச் சென்னைக்கு வந்தார். முருகன் அவரை அழைத்துப் போய் சிங்காரஞ் செட்டியாரிடம் அறிமுகம் செய்து வைத்தான். மருதாசலம் செட்டியாரை வள்ளி வணங்கி அன்புடன் வரவேற்று நல்லுணவு தந்து உபசரித்தாள்.

குலம் குணம் முதலியவை ஒத்திருந்தபடியால் சிங்காரஞ் செட்டியார் மருதாசலம் செட்டியாரிடம் தன் கருத்தை மெல்லக் கூறினார். பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் இருந்தது மருதாசலத்துக்கு. அவர் இசைந்தார்.

சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

முருகனுக்குக் கிடைத்த பெறலரும் செல்வத்தைப் பார்த்துப் பொறாமைக் கனலில் முழுகினாள் கோதைநாயகி.

முருகன் M.A. தேர்ச்சி பெற்றபின் மாமனாருடைய தொழிலகத்தில் முதன்மையாக இருந்து அவருக்கு உதவி செய்தான். முருகனும் வள்ளியும் ஈருடம்பு ஒருயிராக வாழ்ந்தார்கள்.

சில காலத்துக்குப் பின் மருதாசலம் செட்டியார் காலமானார். கோதைநாயகியின் புதல்வர்கள் குடி, புகை, சூது முதலிய தீய பழக்கங்களால் படிப்பு இன்றித் தடிமாடுகளாகத் திரிந்தார்கள். தந்தையார் தேடிய பொருள்களைத் தொலைத்துவிட்டார்கள். பிறகு தனித்தனியே பிரிந்து குடும்பங்களைத் துன்பத்துடன் நடத்தினர்கள்.

நான்கு புதல்வர்களும் தனியே பிரிந்தபின் கோதைநாயகி பாடு ஆபத்தாக முடிந்தது. ஒரு மகன் வீட்டில் ஒரு மாதம் இருந்து காலங் கழித்தாள்.

மார்ச்சு மாதம் முறை வந்தபோது, அந்த மருமகள் கோதை நாயகியைப் பார்த்து, ''பழங் கந்தையே! கிழக் குரங்கே! உனக்கு வரவில்லையே சாவு. பிப்ரவரி மாதம் அவள் வீட்டில் 28 நாள்தானே உனக்குச் சோறு போட்டார்கள். நான் மட்டும் ஏன் 31-ந் தேதி வரை தண்டச் சோறு போடவேணும். போய் எங்காவது கிணறு குட்டைகளில் விழுந்து சாகின்றதுதானே? ஏன் பூமிக்குப் பாரமாக இருக்கின்றாய்? தரித்திரப் பிண்டமே!'' என்று வைதாள்.

கோதைநாயகி அழுதுகொண்டே வீட்டைவிட்டு வெளியேறினாள். எங்கு போவாள்? குளத்தில் விழச் சென்றாள்.

அங்கு ஒரு சாமியார் அமர்ந்திருந்தார்.

"அம்மா! ஏன் அழுகின்றாய்? உனக்கு என்ன குறை; இருட்டில் இங்கு ஏன் வந்தாய்?" என்றார். கோதைநாயகி அவர் பாதமலர் மீது விழுந்து தேம்பித் தேம்பித் அழுதாள்.

"சுவாமி! நான் கொடும்பாவி. நாலு பிள்ளைகளைப் பெற்றேன். இப்போது நடுத்தெருவில் நிற்கின்றேன். 'பிப்ரவரி மாதம் 28-ம் நாள் தானே அந்த மகன் வீட்டில் சாப்பிட்டாய். நான் மார்ச்சு மாதம் 31-ந் தேதிவரை ஏன் சோறு போடவேண்டும் என்று என்னை ஏசிப் பேசி சாகு' என்றாள் மருமகள். ஆதலால் துன்பத்துக்கு முடிவு மரணந்தானே. இந்தக் குளத்தில் என் வாழ்வை முடிக்க வந்தேன்" என்று சொல்லி அழுதாள்.

சுவாமிகள், "அம்மா! இந்த உடம்பு இறைவன் தந்தது. தற்கொலை செய்து கொண்டவர்கள் பேயாக இருந்து பெருந்துன்பம் அடைவார்கள். சிறையிலிருந்த கைதி இடையில் சிறையைவிட்டு ஓடிவிட்டால் அதிகாரிகள் அவனுக்கு மீளவும் பெரிய தண்டனை விதிப்பார்கள். அதுபோல் இந்த உடம்பு முகந்து கொண்ட வினைகளை நுகர்ந்து முடிப்பதுதான் முறை. கிடைப்பதற்கு அரிய இப்பிறப்பை வீணே தற்கொலையால் சிதைப்பது பெரும் பிழை. உனக்கு நல்ல காலம் இருக்கின்றது. நீ நேரே பழநிக்குப் போய், நாற்பது நாட்கள் மலைவலம் வந்து, சண்முக நதியில் நீராடி பழநியப்பனை வழிபாடு செய். உன் பாவந் தேயும். சுகம் தோயும்" என்றார்.

கோதைநாயகி பழநி சென்று, சுவாமிகள் கட்டளைப்படி தான் செய்த தீவினைகளை நினைந்து, கண்ணீரால் உடம்பு நனைந்து, தினந்தோறும் மலைவலம் வந்து, பழநியாண்டவனைப் பக்தியுடன் வழிபட்டு வந்தாள்.

பழநியப்பனைச் சேவிக்கத் தன் மனைவியுடன் முருகன் காரில் வந்தான். சிற்றன்னை தேய்ந்த உடம்புடன் அடிவாரத்தில் நிற்பதைக் கண்டான். கருணை கொண்டான். காரை நிறுத்தி இறங்கி அவள் பாதமலர்மீது வீழ்ந்தான். "அம்மா!" என்று அழைத்தான்.

கோதைநாயகி தன் கண்களை அகல விரித்துப் பார்த்தாள். தன் கொடுமைகளுக்கு ஆளாகிய முருகனை, அவன் கையைப் பிடித்து "மகனே! நீ என்னை மன்னிப்பாயா? நான் உனக்குச் செய்த கொடுமையின் பயனை இந்தப் பிறப்பிலேயே அனுபவித்து விட்டேன்.

# ஸ்ரீராமகிருஷ்ணகுடில், திருப்பராய்த்துறை

"ஒன்றே குலமும் : ஒருவனே தேவனும்"

அற்ருர் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி.

இந்த இருபதாம் நூற்ருண்டிலே, கண்ணியமும் புண்ணியமும் படைத்த நமது தென்னுடாகிய நன்னுட்டிலே, காவிரியின் தென் கரையில் ஒரு புனிதக் கோயில் இருக்கின்றது. இதில் நடமாடுகின்ற 333 பால முருகர்கள் விளங்குகின்ருர்கள்.

தாய் தந்தையரையிழந்த—ஆதரவு அற்ற—திக்கற்ற குழந்தைகள் குடில் கோயிலில் நலம் பெறுகின்ருர்கள். அன்பர்களது ஆதரவையே பெருநிதியாகக் கொண்டு, ஓங்கி வளர்ந்து ஒளி வீசிக் கொண்டிருக்கின்றது. இதில் ஸ்ரீராமகிருஷ்ண பகவானுடைய கருணை வெள்ளம் வற்ருது ஓடிக் கொண்டிருக்கின்றது. இதில் பாரத நாட்டின் எதிர்காலச் செல்வங்களாகிய அன்புச் சிறுவர்கள் புகலிடம் பெற்று, இப்புண்ணிய பூமியின் பெருமையைக் காக்க வெளிவர ஆரம்பித்திருக்கின்ருர்கள்.

---

என்னை நீ அம்மா என்று அழைக்குந் தகுதி எனக்கில்லை. நீ புண்ணியத்தின் குவியல், நான் பாவப் படுகுழி" என்று கூறியழுதாள்.

இந்த உரையாடலைக் கேட்டு வள்ளி திகைப்புற்ருள். காரை விட்டு இறங்கி, "நாதா! இவர் யார்?" என்று கேட்டார். அவள் மகாலட்சுமிபோல் நின்ருள். அவளுடைய ஏற்றத்தையும் தோற்றத்தையும் பார்த்த கோதைநாயகி அதிசயித்தாள். அவளுக்கு உலகமே சுற்றுவதுபோல் இருந்தது.

"வள்ளி! இவர்கள் என் சிறிய தாயார். உலகத்தைத் துறந்து, என்னையும் மறந்து இங்கு தவம் புரிகின்ருர்" என்று பக்குவமாகப் பதில் கூறினுன்.

மிக்க அன்புடன் சிற்றன்னையைக் காரில் ஏற்றிக்கொண்டு சென்னையையடைந்தான். அவள் செய்த பெருங் கொடுமைகளை கடுகளவும் நினையாது, பெற்ற தாயைப்போல் கருதி அவளை ஆதரித்து அன்பு செய்தான். வள்ளியும் அவளிடம் அன்பு காட்டினுள்.

கோதைநாயகி சுவர்க்கத்தில் இருப்பதுபோல் முருகனுடைய ஆதரவில் வாழ்ந்தாள்.

மெய்கண்டாருடைய பரந்த நோக்கத்தையும் சங்கரருடைய தத்துவத்தையும், மத்வர், இராமாநுஜர், ஏசுநாதர் முதலிய ஆன்றோர்களது உண்மைக் கருத்துக்களையும் சேவையே தேவையென்ற தத்துவத்தையும் ஒருங்கே கொண்டு உருவானது ஸ்ரீராமகிருஷ்ணருடைய சித்தாந்தம். ஆகவே ஸ்ரீராமகிருஷ்ணருடைய திருவருளுடன், காந்தியடிகளது கருமயோக சக்தியும் இந்த நிறுவனத்தில்—குடிலில் குடிகொண்டிருக்கின்றது. இந்த அரிய பெரிய நிலையத்திலிருந்து ஏராளமான தொண்டர்கள், நாட்டுக்குச் சேவை செய்ய வெளிவரப் போகின்றார்கள். ஆ! ஆ! அற்புதம்! அற்புதம்! இது போன்ற ஒரு புனிதக் கோயில் எங்கும் இல்லை; இல்லை.

பத்து ஆண்டுகட்குமுன், புனிதர் விநோபாபாவே இங்கு ஒருநாள் இரவும் பகலுந் தங்கி, இதன் உண்மையொளியையும், சேவையுணர்வையுங் கண்டு உள்ளம் பூரித்து, உணர்ச்சி பொங்க, தன் முன் கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு இதன் மகிமையை உள்ளவாறு உணர்த்தினார்கள்.

தவமுனிவரது திருவாக்கின்படி இன்று அன்புச் சிறுவர்கள்' அறங் காக்குந் தொண்டர்களாக முழுப் பயிற்சி பெற்று வெளியேற ஆரம்பித்துவிட்டார்கள். இதன் அருள் ஒளி பரவத் தொடங்கி விட்டது. குடத்துக்குள் நின்ற விளக்காக இருந்த குடில், இன்று, குன்றின் விளக்காகக் குன்றாத புகழ் ஒளியை குவலயம் முழுவதும் வீசி விளங்குகின்றது.

திருச்சியிலிருந்து கரூர் போகும் நெடுஞ் சாலையில் 10-ஆவது மைலில் விளங்கும் திருப்பராய்த்துறை, அப்பரும், திருஞான சம்பந்தரும், மணிவாசகரும், அருணகிரிநாதரும் பாடிப் பரவிய சிவஸ்தலம். முற்காலத்தில் முனிவர்கள் தவம் புரிந்த பராய் வனத்தைத் திருத்திக் கோயில் எழுப்பிய திருத்தலம் திருப்பராய்த்துறை. துலா மாதத்தில் அடியார்கள் ஆயிரக்கணக்கில் திரண்டு, அகண்ட காவிரியில் நீராடி, நீறுடி, சிவபெருமானை வழிபட்டு அருள்பெறும் அரிய திருத்தலம் இது. இத்தகைய திருத்தலத்தில்தான் ஸ்ரீராம கிருஷ்ண குடில் என்ற புனிதக் கோயில் விளங்குகின்றது.

தன்னலமற்ற மக்கள் திருத்தொண்டுக்காக, அவனது அம்சமான தரித்திர நாராயணர்களுக்காக, இறைவன் என்ன காரியம் செய்திருக்கின்றான்—தெரியுமா?

அறங்குன்றி மறம் வளர்ந்து கொடுமைகள் கோர தாண்டவம் புரியும்போது இறைவன் அவதாரம் புரிந்து மக்களைப் பரிபாலிக்கின்றார். இதனை இதயம் படைத்த எவரும் மறுக்கமாட்டார்கள். தன்னருள் பெற்ற உத்தம ஞானிகளையும் அவதரிக்கச் செய்கின்றான் இறைவன். நாயன்மார்களும் ஆழ்வார்களும், உலகைத் திருத்த வந்த உத்தம அவதார புருஷர்கள் ஆவார்கள். இந்த மெய்யடியார்களது வரிசையில் வந்தவர்தான் **பிரம்மசாரி இராமசாமியடிகளார்** ஆவார்.

வாய்மையுந் தூய்மையும் பூண்டு, வறியவர்க்குத் தொண்டு செய்ய வந்த மெய்யடியார் இவர். வையகம் போற்றும் இவரைக்

காணுந்தோறும் கண்ணுங் கருத்தும் ஒருங்கே குளிர்கின்றன. இந்த அடியவரது இடையறாத கருமயோகம் ஒரு இந்திர ஜாலம்போல் என்னவெல்லாம் செய்திருக்கின்றது? அம்மம்ம! எத்தகைய அற்புதத்தைச் செயல்படுத்தியிருக்கின்றது. செயல்படுத்திக்கொண்டேயிருக்கின்றது என்பதைக் கண் படைத்த ஒவ்வொருவரும் கண்ணாரக் கண்டு களிகூரவேண்டும். திக்கற்ற மனித சமூகத்தைத் தெய்வாம்சமாக்கக் கருதி, செயல் முறையில், சேவை செய்துவரும் இவர், அந்தப் பெருந்தவத்துக்குத் தன்னை முழுவதும் அர்ப்பணித்துக் கொண்டு சாந்த முனிவராகத் திகழ்கின்றார்.

இந்தவுலகில் இவருக்கென்று ஒன்றும் இல்லை. இன்ப துன்பமோ—ஆசாபாசமோ இல்லை. எல்லாம் குடிலில் வாழும் சிறுவர்களின் வளர்ச்சியும் வாழ்வுமே இவருடைய வாழ்வும் இன்பமும் ஆகும்.

இயற்கையன்னை பூரணமாகக் குடிலில் கொலுவீற்றிருக்கின்றாள். தன் வனப்பெல்லாங்காட்டி, வையத்து வாழ்த்தையுங் கூட்டி, வானத்து மாந்தர்க்குரிய வாசஸ்தலமாக்கியிருக்கின்றாள்.

ஆதியான அன்னையே அநாதை என்கின்றது வேதம். அந்த ஆதியும் அந்தமுமான தரித்திர நாராயணர்கள் வானத்தவர்தாமே?

ஆஸ்ரமத்தின் பின் பாகமாகிய வடபுறத்தில், ஏழ்தலம் புகழ் இனிய தீர்த்தமாகிய காவிரி நதி ஓடிக்கொண்டிருக்கின்றது. முன் பாகமாகிய தென்புறத்திலே, பழைய ராமவாய்த்தலை, புதிய ராம வாய்த்தலை என்னும் இரு வாய்க்கால்கள், அகழிபோல் ஆஸ்ரமத்தின் இரண்டு பிரதான வாயில்களை ஒட்டி ஓடிக்கொண்டிருக்கின்றன. கிழக்கிலும் மேற்கிலும் நெடுக மாந்தோப்புக்கள் சூழ்ந்திருக்கின்றன. ஒரு மாமரத்தின்கீழ் ஏகாம்பரநாதர் வாழ்கின்றார். இங்கு பல மாமரங்களின்கீழ் ஏழைக் குழந்தைகள் வாழ்கின்றார்கள்.

நல்வேளையாகிய நடுநிசியில், சோலைகளின் இலையொலியும், வாய்க்கால்களின் மதகிலிருந்து ஓயாது விழும் நீரொலியுங்கூடி "ஓம்" என்ற பிரணவத் தொனியுடன், நாத விந்து கலாதியான நாயகனை சதா நினைவூட்டக் கூடியதாயிருக்கின்றன. இந்த இன்பம் எங்கு கிடைக்கும்?

புனிதமான அருள் சூழ்ந்த இந்தச் சூழ்நிலையில் குடிலொன்றை நிறுவி, 1949-லிருந்து 1954 வரை, ஐந்து ஆண்டுகள், தனித்திருந்து தவஞ்செய்தார் பிரம்மசாரி இராமசாமியடிகளார். இவரைத் தடுத்தாட்கொண்ட தயாளர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர்.

அல்லும் பகலும் ஆறு ஆண்டுகள் ஸ்ரீராமகிருஷ்ணரது அடிமலர்களில் தன்னைக் கிடத்தித் தனக்கொரு மார்க்கத்தைக் காட்டியருள் என்று பிரார்த்திக்க பிரம்மசாரிக்குப் பகவான் ஆத்மார்த்தமாக உணர்த்திய மார்க்கம் என்ன தெரியுமா? "நீ பனிமலை சென்றாலும்

பத்து பேருக்குப் பணி செய்யப் பிறந்தவனே'' என்பதுதான். தரித்திர நாராயண சேவைக்குத் தன்னை முழுவதும் ஆட்படுத்திக் கொண்டதற்கு, பரமஹம்சரது அருளும், அவருடைய திருச்சைகையுமே காரணமாகும்.

1954-ம் ஆண்டில் ஐந்து குழந்தைகளுடன் ''ஸ்ரீராமகிருஷ்ண குருகுலம்'' என்ற அநாதை விடுதி ஆரம்பமாயிற்று. இன்று 333 அநாதைச் சிறுவர்களுக்குப் புகலிடம் அளித்து, இன்னும் இந்த நாட்டில் எத்தனை அநாதைச் சிறுவர்கள் இருப்பினும் ''இடமில்லை'' என்று சொல்லாது, புகலிடம் அளிக்கவும் ஆயத்தமாக இக்குடில் திகழ்கின்றது.

இந்த நிறுவன விதிகளுக்குப் பொருத்தமாயிருந்து இங்கு சேர வந்த எந்த ஒரு சிறுவனுக்கும் ''இடமில்லை'' என்று மறுத்ததில்லை. ஜாதி, மத, இனம், கட்சி என்ற பேதமின்றி, மனித சமூகம் முழுவதற்கும் குடிலைப் பயன்படுத்திக்கொள்ள உரிமையுண்டு.

''ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயம்'' என்ற பெயரில் ஒரு உயர்நிலைப் பள்ளி ஏற்படுத்தப்பட்டு, மாணவர்கள் உயர்நிலைக் கல்வி பெறுகின்றார்கள். துடைப்பம் எடுத்துத் துப்புரவு செய்வது முதல், மலர் எடுத்து மாலைதொடுத்து வழிபடுவதுவரை, வாழ்க்கைக்குத் தேவையான, எல்லாவிதமான பயிற்சிகளும் மாணவர்களுக்குப் பயிற்றுவிக்கப் பெறுகின்றன. கல்வியறிவு பெற்றுவிட்டால் சமூகத்தில் உடலுழைப்புத் தேவையில்லை என்ற தற்கால மனோபாவத்தை மாற்றி, உலக நலத்தின் பொருட்டு எத்தகைய உடலுழைப்புக்கும் தயாரான நிலையில் மெய்த் துணிவுடனும், தன்னம்பிக்கையுடனும் மாணவர்கள் பயிற்சி பெறுவது—வேறு எங்குமே காண முடியாத அரிய காட்சி—இங்கு காணுமாறு விளங்குகின்றது.

உயிர் வாழ்க்கைக்கு ஆதார சுருதியாக மிளிர்வது உணவு. இந்த உணவுக்கு ஆதாரமான விவசாயத்தில் மாணவர்கள் நேரடியாக ஈடுபட்டு சுமார் 10 ஏக்கர் நன்செய் நிலத்தில் நெல் விவசாயமும், சுமார் 6 ஏக்கர் புன்செய் நிலத்தில் காய்கறிகளும் பயிரிடுகின்றார்கள். ஆண்டொன்றுக்கு, குடிலுக்குச் சொந்தமான நிலத்தில் வரும் நெல் போக, சுமார் ஆயிரம் மூட்டை நெல்லும், 250 மூட்டை கோதுமையும் குடிலில் செலவாகின்றன.

அநாதை விடுதிகளுக்கு உள்ள அரசாங்க மான்யப்படி ஒரு மாணவனுக்கு மாதம் ஒன்றுக்கு ரூபாய் 10 மான்யம் அளிக்கப்படுகின்றது. ஆனால் சராசரி மாதம் ஒன்றுக்கு ஒரு மாணவனுக்கு ரூபாய் 30 செலவாகின்றது.

ஒவ்வொரு ஆண்டிலும் நிறுவனச் செலவு சுமார் $2\frac{1}{2}$ லட்ச ரூபாய்கள் ஆகின்றன. அரசாங்க மான்யம் சுமார் $\frac{3}{4}$ லட்சம் போக $1\frac{3}{4}$ லட்சம் பற்றுக்குறை ஏற்படுகின்றது. இந்தப் பற்றுக்குறையில் பெரும்பகுதி அன்பர்கள் வழங்கும் நன்கொடைகளின் மூலம் ஈடு செய்யப்பெறுகின்றது.

இந்த நிலைமையைக் கண்ட அடியேன் ''திருவருள் திட்டம்'' என்ற ஒன்றை அமைத்து ஒரு மாணவனுக்கு ஆண்டொன்றுக்கு

300 ரூபாய் தருவது என்று கருதி, எட்டு ஆண்டுகளாகத் தந்து வருகின்றேன். என் உழுவல் அன்பர்களேயும் வழங்குமாறு செய்துள்ளேன். சிலர்தான் இதில் ஈடுபட்டார்கள். புதுவைக்கருகில் உள்ள பாளையம். திரு. புருஷோத்தம ரெட்டியார், ஒரு நிலத்தைக் குடிலின் மீது சாசனமாக எழுதி வைத்து ஆண்டுதோறும் திருவருள் திட்டப் படி இரு மாணவர்களுக்கு உதவி வருகின்றார்.

உயர்நிலைக் கல்வி முடிந்த மாணவர்களுக்கு அவர்களுடைய எதிர்கால வாழ்க்கைக்கு ஒரு வகை செய்யவும், ஆண்டுதோறும் ஏற்படும் பற்றுக்குறையை அகற்றவும், ரூபாய் 7½ லட்சம் திட்டத்தில் ஒரு தொழிற்பேட்டை தொடங்கியுளது. 1962-ல் திட்டம் இட்டு அப்போதைய தமிழகத் தொழில் அமைச்சர் திரு. R. வெங்கடராமன் அவர்கள் கடைகால் இட்டார். அந்தத் தொழிற் பேட்டைத் திட்டம் சிறிது சிறிதாக உருப்பெற்று, இதுவரை சுமார் 3½ லட்சம் முதலீடு செய்யப்பட்டிருக்கின்றது. தற்போது பம்பு செட்டுக்களும், அதற்குரிய மோட்டார்களும் தயார் செய்து வருகின்றது.

இதுவரை இந்தத் தரும ஸ்தாபனம் வளர பொது மக்களிடமிருந்து சுமார் 30 லட்சம் ரூபாய்கள் நன்கொடையாக வசூலிக்கப் பெற்றுள்ளன.

தமிழ்நாட்டில் இனி "அநாதை மாணவர்களே இல்லை" என்ற லட்சியத்தை ஒவ்வொரு ஆண்டும் காரிய சாத்தியமாக்கும் பெரு நோக்கில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கின்றது குடில்.

இத்திருக் கோயிலாகிய குடிலை அன்பர்கள் அனைவரும் தரிசிக்க வேண்டும். மனமும் தனமும் படைத்தவர்கள் இதில் பங்கு பெற வேண்டும். வாழ்க குடில். வளர்க அறம்.

## அறிவிப்பு

காஞ்சிபுரம், மெய்கண்டார் கழகத்தார் ஆண்டுதோறும் வெளியிட்டு வரும் அறுபத்து மூன்று நாயன்மாராதியர் திருநட்சத்திரப் படம் வெளிவந்துவிட்டது. வேண்டுவோர் இருபது காசு (0-20) தபால் தலைகள், கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி இரண்டு முதல் நான்கு படங்கள் வரை பெற்றுக்கொள்ளலாம். விபரமாக முகவரிகள் எழுதி அனுப்பவும்.

வீ. திருஞானசம்பந்த முதலியார்,
செயலாளர் : மெய்கண்டார் கழகம்.
32, மண்டபத் தெரு, காஞ்சிபுரம்.

## கோடி அர்ச்சனை

திருச்சிராப்பள்ளி, குமாரவயலூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்குக் கோடி அர்ச்சனை தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வருகிறது. அன்பர்கள் பின்வரும் விலாசத்துக்குப் பணம் அனுப்பி வைத்துக் கோடி அர்ச்சனையில் பங்கு பெறலாம். சஹஸ்ர நாம அர்ச்சனை ஒன்றுக்கு ரூ. 10-00

பொக்கிஷதார், கோடி அர்ச்சனைக் கமிட்டி,
25, பஞ்சவர்ண சுவாமி கோயில் தெரு,
உறையூர், திருச்சி-3.

---



---